[illegible]

வேலுமயிலுந்துணை

# சிறுநூற்றொகை.

இது

சென்னைமாநகரம்-

வா. மகாதேவமுதலியாரவர்களால்

இயற்றப்பெற்று,

ஸ்ரீமான். பிச. அரு. அரு.

அருணாசலஞ்செட்டியாரவர்கள்

பொருளுதவியால்,

மீனலோசனி முத்திராக்ஷரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.



1912.

உ

சிவமயம்.

காரைக்குடி-ஸ்ரீமான்.

# ராம. சொ. சொக்கலிங்கச்செட்டியாரவர்கள்

மாணாக்கருளொருவராகிய

சிவகங்கை ஜமீன்

## திருப்புத்தூரைச்சேர்ந்த தப்பிபட்டி-

## சொ. வேலுச்சாமிக்கவிராயரவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகமொரு குடைநிழலிற் காத்தளிக்குந்
திகிரியோற் குரிய வாகத்
தலைமையுறு மரசிருக்கை தமிழனென்றுஞ்
சென்னையப்பா சாமி வள்ள
லலகிலதா வியற்றுதவப் பயனானேன்
மெய்யுணர்த்து மடைவிற் போதித்
திலகியசொக் கலிங்கனரு திருவருள்பெற்
றவனடிக ளிறைஞ்சி வாழ்வோன். (க)

செந்தமிழி னிலக்கியமு மிலக்கணமுஞ்
சித்தாந்தத் தெய்வ நூலுஞ்
சந்தமுறு தருக்கமுதற் பலநூலோ
டாங்கிலமுந் தகக்கற் றுய்ந்தோன்
வந்தடையு மாணவர்க் கன்பினொடு
நூல்கள்பல வழங்குங் காலைச்
சிந்தைகொள நுண்பொருளு மெய்ம்மைபெற
வவர்க்குணர்த்துஞ் சிறப்பின் மிக்கோன். (உ)

மன்னுபுகழ் மகாதேவ பண்டிதன்றா
　　ணடக்கமமை மாண்பு தோன்ற
வுன்னுசிறு நூற்றொகையாம் பெயர்தந்து
　　பெரும்பொருணூ லுரைத்தா னம்மா
வன்னதனை யறிஞர்மகிழ் பூப்பவச்சிட்
　　டுதவினனா லவன்யா ரென்னிற்
கன்னல்கமு கெனுங்கழனி சூழ்தேவி
　　கோட்டைநகர்க் கவிஞர் செம்மல். (௩)

துறைவிரவு பெருஞ்செல்வ வைசியர்தங்
　　குலத்துதித்தோன் றூய ஞானப்
பிறைவிரவு முடிப்பரன்வா ழிலுப்பைநகர்க்
　　கோயிலினான் பேற்றால் யார்க்கு
நிறைவிரவு தன்மையொன்றே பெறுகுபே
　　ரனின்மேலா நிகழ்த்துஞ் செல்வ
னறைவிரவு சோலைமலி செந்தூரித்
　　கந்தனடி நயக்கு மன்பன். (௪)

சேவிலூர் கொற்றவா ளீசர்திரு
　　நெல்லையம்மை திகழு மேன்மைக்
கோவிலூ ருறையருணா சலத்துறவு
　　சாமிகளின் குமரன் சேயாம்
பாவிலூர் புகழருணா சலமகிபன்
　　றருமைந்தன் பண்பு மேய
நாவிலூர் பலகலைதே ரருணாச
　　லப்பெயர்கோ ணரேந்த்ரன் மாதோ. (௫)

உ

வேலுமயிலுந்துணை.

# திருச்செந்தூர்முருகர் பதிகம்

## காப்பு.

### வெண்பா.

பண்ணேறு செந்தமிழிற் பாடத் திருச்செந்தூர்க்
கண்ணேறு சோலைமயிற் காவலனை—பொண்ணேறு
சிந்தந்தி யங்கிலன் சேவித்து நிற்கின்றேன்
மைந்தந்தி * யங்கிரிதம் மை.

## நூல்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பாமாதி யாரூறுங் கடந்து நின்ற
 பரணியாண் டானப்ப னன்பன் § ருனென்
றோராத நாளெல்லா நன்று ளாமோ
 வுதித்திடா நாளன்றோ வோது கண்டாய்
நேராக நின்றுபோ ரேற்ற சூர
 னீர்க்குமிழி போன்றொழிய வேலை விடுத்துத்
தீராத விடர்தீர்த்த தீர வீர
 சிற்பதமே செந்தூர்வாழ் செல்வத் தேவே. (௧)

---

* அங்கிரி—திருவடி.

§ நான் என்று—ஸோஹம் என்று.

வில்லொன்று நுதல்வல்லி பெற்ற செல்வா
வேதியனே செந்தூர்வாழ் விமலத் தேவே. (௪)

* உடம்பானு மற்றதுகொ ளுயிர்தன் னானு
முறவனைவுந் தெய்வத்தா னுறுவ யாவுங்
கடம்பாவின் கழல்பாவு காத லோர்தம்
காற்றுகளே கருவிலோர்க் கருவா வென்ப
நடம்பானல் விழிகளிக்க நவினு நாத
னல்லுபதே சங்கேட்க நவின்ற சாமி
யுடம்பாடி லனைத்தையு மொழித்த வேளா
வுத்தமனே செந்தூர்வா ழுண்மைத் தேவே. (௫)

ஓதகமே பொப்புயர்வில் சடக்க ரத்தை
யுலவாத வின்பங்கை செல்வி யாமே
தோதகமே யிருந்தவிடந் தோன்று மற்போர்
தொல்லைவினைத் தொடக்கறுக்குஞ் சூழ்ச்சி யீதே
பாதகமே படரவுணப் பதும ரத்தைப்
பகுந்திருகூ றாக்குபராற் பரனே மன்னிப்
போதகமே பொலிநாணற் பொய்கை பூத்த
புண்ணியனே செந்தூர்வாழ் புனிதத் தேவே. (௬)

புத்தியெனும் பாகுய்ப்பப் பொள்ளல் யாக்கைப்
போகுயரு மிரதத்தைப் பொறிக ளாகு

---

* என்றுக் குறிக்கப்பட்டன:- ஆதிபௌதிகம், ஆத்தியாத்மிகம், ஆதிதெய்விகமென்னும் தாபத்திரயங்கள்.

மத்திகையிற் கவினப்பாய் மாவி ழுத்து
மலிவிடய வனம்புகுதும் வயப்ப டாதே
சத்திவடி வேலேந்திச் சங்கி ராமந்
தருசிகா வளத்துவரு சாமி நாதா
முத்திவடி வேதந்தா வளத்தின் றம்பீ
முருகனே செந்தூர்வாழ் முதன்மைத் தேவே. (௭)

பாரகத்தும் விசும்பகத்தும் பரவ லான
பரங்குன்றஞ் சோலைமலை பழநிக் கன்று
மேரகத்துங் குன்றுதொறும் வீற்றி ருப்பா
யென்னைநீ யன்றேவெற் கிசைத்தி கண்டாய்
வேரகத்து நனியகத்துஞ் சுவைவெவ் வேறு
விளைகரும்பைக் கவற்றுமொழி வள்ளி மாது
வாரகத்து வைத்தகடைக் கண்ணா விண்ணோர்
வந்துபணி செந்தூர்வாழ் வாய்மைத் தேவே. (௮)

வள்ளாணிற் * றேனிப்பார் மருவல் வேண்டு
மதிவேண்டு நின்கருணை நிதியும் வேண்டு
மெள்ளாமை துள்ளாமை யிகழ்பெ ருமை
யேதநோய் மேவாமை யென்றும் வேண்டும்.
பொள்ளாத முழுமணியே பொன்னே முத்தே
புரையில்லா வயிரமே பூவே பூவின்
விள்ளாத நன்மணமே வேதாந் தத்து
வியன்பொருளே செந்தூர்வாழ் விமலத் தேவே. (௯)

---

*தேனிப்பார்—தியானிப்பார். 'சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்' எனப் பெரியாரும் பணித்தார்.

## திருச்செந்தூர்முருகர் பதிகம்.

மணியாழிப் பெரும்புவியின் மன்னாய் வாழ்வார்
மகப்பெறுவார் வாழ்நாளு மிகுவார் சிந்தா
மணியாவைக் கற்பகத்தை வளைபத் மத்தை
வைத்தேவல் கொள்வார்நின் னாமங் கற்பார்
குணியாகிக் குணமாகிக் குறிய தாகிக்
குறிகண்டு துணிபொருளாய்க் குலவு மொன்றே
கணியாகிப் புனத்தருகே காணை நின்ற
கருத்தனே செந்தூர்வாழ் கருணைத் தேவே. (௰)

முற்றிற்று.

வேலுமயிலுந் துணை.

# பழநியாண்டவர் பதிகம்.

## காப்பு.

### வெண்பா.

பார்பூத்த தென்பழநிப் பாற்பொலியு மாண்டவனற்
சீர்பூத்த மால்புகழைச் செப்புதற்கிங்—* கார்பூத்த
தாமத்தன் றந்தவொரு தந்தியிரு தாளுளமாஞ்
சேமத்தின் வைத்தேன் றெரிந்து.

## நூல்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகெலாம் † பலத்தகநேர் வித்தொத் தேவன்
புறமாயைக் குள்ளாகி யுறுதி காணு
தலமிலாக் கவலையுந் தினைதா ன்றுக
வான்றோர்கண் முந்திரிகை வித்தி னிங்கே
யிலகியே மாயைதனக் கப்பா லாகி
யிணைதமக்குத் தாமேயா யிசைந்தா ரன்றோர்
விலகுறுப் பெருமையென்றே விழியுற் றுய்வேன்
வித்தகனே பழநிமலை மேவெம் மானே. (௧)

---

* ஆர்—ஆத்தி. † பலம்—பழம்.

தம்மையறிந் துலகினைத் தழுவிப் பற்றத்
　　தக்கநெறி யறையுமான் மறைக ணிற்கச்
செம்மையறிந் துய்கலாச் சிறியர் சில்லோர்
　　சிற்றறிவிற் றோன்றியவா சிலபி தற்றி
வெம்மையுறப் பசுநூலென் றதனை யெள்ளி
　　மேதக்கோர் நகைபுரிய வினைவிளைத்தா
ரம்மையப்ப வவருயுமா றுள்ள தேகொல்
　　லாரமுதே பழநிமலை யமரெம் மானே. (உ)

ஆம்பரிசி னின்றால வடிவ நெஞ்சி
　　னழுத்திநித்ய கருமமுமற் றதனி னேருந்
தோம்பலவு மகலவிதி தோன்று மாற்றாற்
　　றாயனைமித் தியகரும மதுவுஞ் செய்யிற்
றும்பிலா வெனக்காணு முலக மெய்யாத்
　　தயங்கவரு † மலந்தொலைத்தாள் பவனீ யன்றோ
காம்பிணங்குந் தோளுமையாள் களிக்குஞ் செல்வா
　　கண்ணியனே பழநிமலைக் கண்ணெம் மானே. (ங)

அருத்தியொடுன் பதமலரை யணுகி நாளு
　　மகங்குழைந்து பணிந்தெழுந்தீ ரத்தஞ் சென்னி
பொருத்தியுன தேதமிலாப் புகழைப் பாடிப்
　　புண்ணியா புனிதாநின் றொறெ ழுத்தைக்
கருத்தினமைத் தொருகணமு மகலா வண்ணங்
　　கண்ணுமலர் ‡ விட்சேபங் கழற்று வாய்நற்
கிருத்தியமொ ரைந்துடைய கிருபா மூர்த்தி
　　கேகயமால் பழநிமலைக் கிளரெம் மானே. (ச)

† மலம்—பாவம். ‡ விட்சேபம்—மனக்கலக்கம்.

மண் § ணாசை பெண்மூன்றின் மன்னு வாஞ்சை
மாற்றியுயர் ஞானகுரு மலர்முகம்பார்த்
தண்ணாவோ நானாரென் றறைதி யென்று
வடிவணங்கி $ யெண்குணமு மமைந்து சிறக்கப்
பண்ணோறு தத்தொமசி பகரக் கேட்டப்
பரநிலைநின் றவர்தமதஞ் ஞானம் பாற்றுங
கண்ணாவாய் நீயலையோ கற்றோ ரேத்துங்
கத்தனே பழநிமலைக் கண்ணெம் மானே. (௫)

மனமுளதே லுலகுளதஃ திலதே லில்லை
மற்றதியாங் ஙனமென்னின் மருவு மூன்றாய்த்
தினமுளதா மவத்தைதமிற் றிகழ்சு ழுத்தி
சேரினால இல்லைமன மின்மை யாலே
யினமுலகே யஃதொழிந்த விரண்டி னுண்டா
மியங்குமன முண்மையா லென்றெ னக்கே
கனமுளநீ யுணர்த்தினா யென்கைம் மாறே
கலைமுடிவே பழநிமலைக் கண்ணெம் மானே. (௬)

---

§ ஆசை—பொன்.

$ எண்குணங்களாவன:—வேர்த்தல், கண்ணீர்ததும்பல், கம்பித்தல், மெய்நடுங்கல், வார்த்தைதழுவல், மனம்பதறல், மேகம்போலுள்ளே குமுறி யுளமெலாம் வெதும்பல், மயிர்க்குச்செறிதல்.

ஒருமாயா ¶ விசிட்டபரப் பிரம மூலத்
தோன்றுசமு சாரமரக் கிளைசத் தாதி
மருவாறு மலராறமு மறமுஞ் சார
மாறிலற முதனான்கு மிலைகள் வேதம்
வருமோயாப் பலன்சன்ம மரணா திக்கண்
வாதையே யெனுமிவற்றை வகுத்துக் காட்டித
திருமாறு வெண்ணிலையைத் தெளியச செய்தாய்
தெய்வதமே பழநிமலைத் திகழெம் மானே. (௭)

ஆயுதரத துற்றிடுபோ ‡ தரந்தை யோரைந்
தணைவுமிடை யுளதிதியி னத்த மீட்டல்
காயுமழி பசிபிணிவெங் காம மூப்பாற்
கரையிறுன்பம் வருமரண காலந் தன்னி
லேயுமஞர் நீயறிவா யென்றே நல்லோ
ரியம்பினரித் துன்பமெலா மொழிவ தென்றே
வாயுமறை யினங்காணா தயர்ந்து தேடு
மப்பனே பழநிமலை யமரெம் மானே. (அ)

---

¶ விசிட்டம்—உடைமை.

‡ ஐந்தரந்தை [அவஸ்தை] யாவன:—கருப்பாசயப்பையுறுத்தல், அதிற்சலம்பூரித்தல், உதிராக்கினிசுடுதல், பிரசூதவாயுமுறித்துத்தள்ளுதல், யோனித்துவாரநெருக்குண்டல்.

* இலயமே விட்சேப மேக டாய
|| மிரசாசு வாதமென விசைக்க லுற்ற
நலமதே யில்லதொரு நான்கா 0 மூற்றை
நணுகாமற் காத்துயரு நிருவி கற்ப
நிலயமார் சமாதியினை மேவி நிற்ற
னின்மலவெந் நாளதனை நிகழ்த்து கண்டாய
மலயமா முனிக்கருளு மணவாக் கெட்டா
வான்பொருளே பழநிமலை வளரெம் மானே. (கூ)

---

* இலயம்-ஆலஸ்யத்தினுலாவது நித்திரையினுலாவது விருத்தி யில்லாமலிருப்பது. விட்சேபம்-அநாத்மபதார்த்தங்களைத் துக்கவேதுக்களாக அறிந்து அத்துவிதானந்தத்தை விஷயமாக்குவதற்காக விருத்தி அந்தர்முக மாகிறது. அப்போது விருத்திக்கு விஷயமான சேதனம் அதி சூக்குமமா யிருக்கிறது. ஆகையால் கொஞ்சகாலமாவது விருத்தி அந்தர் முகமாயில்லாவிடில் சேதனஸ்வருபானந்தத்தை யடையாமல் விருத்தி அக்கணமே பகிர்முக மாய்விடுகிறது. இந்தப் பகிர்முக விருத்தி விட்சேபம். கடாயம்-இராகாதி தோஷங்கள்.

|| இரசாசுவாதம்-யோகிக்குச் சமாதியில் விட்சேபத்தாலான துக்கநிவிர்த்தியினின்று முண்டாகு மானந்தானுபவம்.

0 ஊற்றை—இடையூற்றை.

சோகமா மோகமிவை தனுமெ ணுது
துயருழக்கு மனமாய்க்கச் சூழ்ச்சி சொல்லாய்
மாகமா நாட்டவரைப் புரக்க வந்த
மல்லாருந் திணிதோளா மாசற் றோனே
ஏகனா மென் றுணுவா ரிதயத் துள்ள
வீசனே * யெண்குணனே யீறி லானே
யோகமா யின்மையா யுண்மை யாகி
யோங்கறிவே பழநிமலை யுறையெம் மானே. (௰)

முற்றிற்று.

* எண்குணங்களாவன:—தன்வயத்தனாதல், தூயவுடம்பின னாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை.

உ

வேலுமயிலுந் துணை.

# பழநி நான்மணிமாலை.

## காப்பு.

### வெண்பா.

எழநிமலை யுள்ளத் திருக்கு மகிழ்ச்சி
பழநிமலை சேர்குகனார் பற்ற—மழவிடையா
ரீன்றதும்பி யான்றெருக்கு மிந்நான் மணிமாலை
தேன்றதும்பி வரசமுறச சேர்.

## நூல்.

### வெண்பா.

பாரேந்து கொள்கைப் பழவடியா ரேத்தெடுக்குஞ்
சீரேந்து நின்றதனித் தென்பழநி—சேரேம்
பிறவிக் கடல்கடக்கும் பெற்றியெமக் குண்டோ
* குறவிக் குகந்த குரு. (க)

### கலித்துறை.

உகம்பற் பலமா நிரயத் தழுந்தினு முன்னையன்றிப்
புகம்பற் படாநா வணக்கம் புகன்று புகலிடமொன்

---

* குறவி-குறத்தி. "குறவிதோள் மணந்த செல்வக்குமரவே டாதை" என்றார் ஆளுடையவரசும்.

நகம்பற் பமதாம் படியருள் வாயெங்க ளன்னையத்த
விகம்பற் றுருச்சீர்ப் பழநி மலேப்பன் னிருகண்ணனே. (௨)

## விருத்தம்.

கண்டங் கறுத்த காபாலி
கடுகிப் பாதஞ் சிவந்துவந்து
கண்டங் குன்னே யோமொழிக்குக்
கண்ட பொருளைக் கேட்கநீர்க்
கண்டங் கன்ன லெனவினிக்கக்
கழன்ற பழநி வாழ்வேயுன்
கண்டங் கிருளை யருளாலே
கழிக்க வல்லோ னீதானே. (௩)

## நேரிசையாசிரியப்பா.

நீதா தாதா நீதா வருளென்
றோதா நின்றே யுறுதி நாடி
முற்பல பிறப்பின் முதிர்தவம் புரிந்து
சிற்பர வியோமஞ் சேர விருந்தோ
ரிருண்முழை யுள்ளரி யேறு தாழ்வோ
ரருண்முறை யறிந்தைந் தலம்புரி பொறிப்பெயர்ச்
சிரமுடை மனமெனுந் தெய்யவா டரவ
மரமுடை யாக்கை வன்மீ கத்திடைச்
செயலத் திருப்பச் செப்புபு மந்திர
மயலுத் தகழுஉ வலியா வேட்கையா
நச்சா ரெயிற்றை நற்கெடுத் தெறிந்தோர்
மெய்ச்சார் புடையோர் மேவுதென் பழநி

மாமலை மருந்தே திருமான் மருமான்
பூமலை யாது புரக்குமா மலயம்
புக்க முனிவரன் புளகரும் பாகின்
றுக்ககண் ணீரு முருகுமுள் ளமுமா
நிற்க வப்பொரு ணிகழ்த்திய பெருமா
னற்கலை பலவு நாடும் பெம்மான்
மிகையுடை யாடவர் மிளிரு நாளிது
தகையழி மகளிர் தழைக்கு நாளிது
வல்வழக் கொன்றே வளரு நாளிது
நல்வழிக் கேகார் நலமுறு நாளிது
செற்ற மிகுத்தோர் செழிக்கு நாளிது
கற்ற வலத்தோர் கடைபடு நாளிது
பொய்மெய் யாகிப் பொற்புறு நாளிது
மெய்பொய் யாகி மேவு நாளிது
வேலியும் பயிரை மேயு நாளிது
தோவிருந் துஞ்சுளை தொலையு நாளிது

அதனால்,

மழைதரு வளனு மடங்கிய தெருவொடு
தழைதரு நிலனுந் தருவளங் கரந்தது
வறுமை மிக்கது வயக்க மற்றது
வெறுமை மேயது வெவ்வேறு கற்றே
யுடலார் வலியு முயிரார் குணனு
முடனார் வின்றி யோகைபொன் றியதால்
வயிறோம் புதற்கே வயின்வயி னோடினேஞ்
செயிரே நீங்கச் சேர்த்தொரு கணமு
நின்னை நினைந்து நோர்ந்திலேம் வணக்கு

முன்னைநல் வினையிலே முனைவவாட் கொள்வது
நின்பெருங் கடனே நிகழ்த்தினே மையா
பொன்பெறும் வறியர்ப் போன்றுற நின்னடிக்
கன்பெனு மொன்றே யருளுதி
துன்பெனு மொன்று துவாக் கழிமே. (௫)

## வெண்பா.

கழித்தேன் பலவைகல் கைதவமே செய்து
விழித்தேன் கவல்கின்றேன் வேலா—செழித்தே
யகர்தென் பழநி யடையகா டாதே
யிகக்தென் பழவினையை யென். (௬)

## கலித்துறை.

என்பங் குருகநின் றேத்து மடியார்க் கிருமைமுத்தி
யின்பங் குலவ வளிக்கும் பழநி யிருக்குமெந்தா
யென்பங் கிருத்தி மனமாம் புலத்தை யியறிருத்தி
யன்பங் குரித்திட வாசார வித்திட் டமைவுறவே. (௭)

## விருத்தம்.

அமையாது வானுயரு மன்பே யென்கோ
வடங்காது கரைபுரளு மின்பே யென்கோ
விமையாது வாழ்கின்ற நிமைக்க ணோயை
யிரா விமுன்பு பனியாக்கு மருந்தே யென்கோ
வெமையாதுஞ் செய்யும்வினைக் கீர்வா ளென்கோ
வேதென்கோ வேதென்கோ வினையி லெந்தா
யமையாரும் பழநிமலை யமர்ந்தா யின்றே
யருள்புரிவா யேத்தடியே னறியு மாறே. (௮)

## நிலைமண்டில வாசிரியப்பா.

அறிவே நெறியே யத்து விதமே
குறியே குணமே குலமே யின்றி
வயங்குவான் பொருளே மண்ணின் ணிருந்து
மயங்குவார் காணு மணியே யொளியே
துனிதரு வாழ்க்கைத் துயர நீக்கெனக்
கனிதரு கிற்பார் கலைக ளாகி
யொருவே லெடுத்த வுருவே யுலவாத்
திருவே பழநித் தேவே நீயுனை
பகுதி நின்னுழைப் பருந்தடர் சுரத்திடைப்
புகுதிகண் டோர்காண் புனலென வுரைதர
வென்றறிந் தோரே யிகபரத் தாசை
பொன்ற விடுத்துப் போக்கொடு வரவு
மின்றி யலைவுறாஉ மிகலார் மனத்தினை
வென்றி கொண்டு மேதகு வீடு
பெட்டுமெற் றஃதுறும் பெற்றி மேவித்
தட்டுமுட் டிலாது தலைப்பட் டோரே. (௨)

## வெண்பா.

தலைப்பட்டா னின்றுளே தன்னை மறந்தான்
வலைப்பட்டா னின்னைமம் வாயி னிலைப்பட்டான்
பிச்சேறி னுண்முருகா பெண்ணின் பழநியிற்கால்
வைச்சேறு மந்நாளாய் மன். (௩)

## கலித்துறை.

மன்றிற் புரியு நடத்தா ரிடத்தார் மனைவிதருங்
கன்றிற் கிளையதொர் காளையை யுன்னிக் கரைந்துருகி

யன்றிற் கலைக்குங் குயிற்குப் பகைமிக் கவர்தனை
யொன்றிற் பழநியிற் கொண்டுசெல் வீராயு மொன்றுதற்கே.

## விருத்தம்.

ஒன்பதுவாய்ப் புலைக்குடிலை மலமிகுபாண் டத்தை
யுறுகணிறை நோய்க்கில்லை யழுக்கினுட லத்தைப்
பின்பொருநா ளெரிகவ்வ விருப்பதனைப் பேணிப்
பெரிதூட்டிப் பனிநீர்கொண் டாட்டியுடை யாட்டிப்
பொன்பவள வயிரமணிப் பூண்களவை பூட்டிப்
பூசுவன பூசியொரு சிலர்காணத் திரியி
னென்பயனோ வொன்றுமிலை நமராங்காள் வம்மி
னெய்திடலாம் பழநிமலை யிருவினையுங் கெடவே. (௰௧)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

இருவினை யிலவே யிறைவனு மிலனே
கருவினை யடைதலுங் கால முற்றுறிப்
பிறத்தலும் வளர்தலும் பின்பொரு நாளி
னிறத்தலு மியல்பே யென்றறிந் திடுக
தீங்குசெய் யற்க தெரிந்தெவர் தமக்கு
மீங்குமற் றதனை யேனையோ ருணர்க்குப்
புரியினவ் வளவே பொருளுமையி றையென்
றுரிய காரண முத்திக் கியைவபோல்
வகுத்தொரு சாரார் மயக்குறக் காட்டிய
பகுத்தறி மனனே பதறி மயங்கிடல்
பாய்வரி மாவது படவே பொருத
வோய்வரி தாகி யொழுகு மதத்தி

னருவி யிழிதரு மடுகரி யந்நிலை
வொருவ மாட்டா துற்ற களவிடை
மற்றது காணூஉ மன்ற விழித்துஞ்
செற்றவ னின்றபூஞ் சினையுடை வேங்கையை
யலைக்கும் பழநி யண்ண லுளனென
நிலைக்கும் வீடவ னிழற்று மடியெனக்
கோடி யுய்வை குறிக்கொளு நலங்கள்
கோடி கோடி குலவிடுங் காணே. (௰௨)

## வெண்பா.

காணிற் பழநிமலைக் காவலனைக் காணாது
வீணிற் பலகண்டார் வேறுள்ள—சேணிற்
கதிபெறவே வேண்டார் கறந்தார் மலட்டா
நிதிபெறவே வேண்டார் நிலத்து. (௰௩)

## கலித்துறை.

நிலைய மருட்குநல் வித்துமுத் திக்கு நிலைகுலைந்தே
யுலைய வெதுப்புமுத் தாபாக் கினியினி னுய்திபெற
வலைவு முயிர்க்கோ ரிருந்தட மன்ப ரகமலர்க்கெல்
கலைய யமிர்திற்குத் தென்பழ நிக்கோன் கழலடியே. (௰௪)

## விருத்தம்.

அடிநா ளிருந்த வன்பும் பிரிந்து
வந்நா ளவின்ற மொழியும்
படிதே செறிந்த வின்பங் குலைந்து
பன்னூ விருந்து பலவு

படியே யிருந்து தன்பண் ணழிந்து
மின்றோ துழுந்தென் பழநி
கடிவே லமைந்த முன்பின் னிளைந்து
வன்றோய் துரந்து புரவே. (௰௫)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

புரவியேழ் பூண்ட பொலந்தே ரண்ண
லிரவியாழ் கடன்மிசை யெழுதரு காட்சி
யொக்க மரகத வொண்ணிற மயின்மேற்
செக்கர் மேனி செவ்வி காட்ட
வகவிரு ரெக்கு மாறு முகருக
சகவிரு புறமுக் கையலா ரிருவர்
பொலிதர மேவு புண்ணிய கண்ணிய
வொலிதரு மருவி யுற்றிழி பழநி
மலையமர் பெரும மயர்வறக் கற்ப
கிலைகட படமென வியம்பிய் பகட்ட
வொருசில வாரியத் துதிர்மொழி பொறுக்கி
யுருவிடு கின்றே முண்மை நிலையே
மேவி யடங்கன் மேலெர் நாளோர்
நாவினின் றும நவிலக் கற்றே. (௰௬)

## வெண்பா.

கற்று மனம்போற் கசிந்துருக வேண்டுவோர்நின்
னற்றுளின் கீழ்மேலோர் நாரியர்பாற்—பற்று
யெரியி னிழுதாவ னேழையே னென்னே
பெரிய பழநியிறை பேசு. (௰௭)

## கலித்துறை.

பேசுகம் வாமனை மேவெருன் பழநியிற் பேரொளியை
வீசுகந் தாடி புதல்வா முதல்வா விதியவுணர்
கூசுகந் தாவென் றருந்தியொ டேகங் குறையகன்று
மாசுகஞ் சேரும் வகையருள் பேறும்பின் மன்னிடும்பே. (௰அ)

## விருத்தம்.

மன்றாத விளமை செல்வ மற்றுநீ பொருட்ப டுத்து
மின்றாத பலவுஞ் சூழ்ந்து மினையின்று மென்னே யென்னே
யென்றாதன் பழநி யின்பா லிருக்கின்ற னடைந்த வர்க்கு
மூன்றாக வின்பந் துன்னு முறைமையாற் சேர்தி நெஞ்சே.

## நிலைமண்டில வாசிரியப்பா.

சேயரி நெடுங்கட் டெய்வ யானை
பாகா வாகா பரமா பழநி
மாமலை மருந்தே மணியே யிருகை
யுடைய யானையை யொத்துளன் குலமத
முருவ மதமே யுற்றவெள வனமதம்
வித்தை மதமே மிளிர்பிர புத்துவ
மதமே சகச மதமே தனமதஞ்
சகாய மதமெனச் சாற்றெண் மதமிக்
கருவி யாகி யாருயிப் பெருக
வென்னுளக் கருவை யேழையான் கண்டிலன்
சத்தி யங்குசஞ் சண்முகா கொண்டு
பாக னாகிப் பரிவினி னணைந்து
மதமடக் கிட்டு வலிமை சான்ற

வாரெழுத் தருக்கொட னமையப் பூட்டி
யருட்கட டத்தே யாரத்துவைத் திடுகவே. (உ௰)

## வெண்பா.

வைவேற் குகபழநி வாழ்வே பலவினைந்து
நைவேற் கிரங்குவதென் னாளுவந்தாட் — செய்வேத
கருத்தாய்யா னூட்டுங் கடப்பாட் டினளா
யொருத்தாய்யா ணிப்பாளோ வோது. (உக)

## கலித்துறை.

ஒசாய் பழநி யுவந்த வடிவேற்கை யுத்தமர்பாற்
றூதாய் விரைந்தனை செல்லுபு கோதாய் துணைவரவர்
கோதாய் இலாதென் மனங்கொண்ட செய்தி குறித்துணர்ந
தீதாய் தருமூ ரவர்களவை யானுற்ற தெள்ளிறினே. (உஉ)

## விருத்தம்.

தெள்ளி யோர்பணி பழநி நாயக
னிமை யென்பதே புரிய நேர்வனேற்
றுள்ள யோர்பலர் குழுமி யேயவண்
ரோ தின்றிடா ரருகு சேர்வரா
துள்ளி யோர்பலங் கெழுமு மாவினை
யோதின் வந்திடா ரொருவ ரேனுமே
யென்னு வார்சிலர் தழுவு வாரையு
மேழை செல்லுமா றறைகு வாயரோ. (உ௩)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

அறைகட லாடை யகனில மடந்தை
நீண்முடி யாகு நேர்பொளிர் பழநி
மாமலை மன்னிய வடிவே லண்ண
லைம மிருப்புழி நடப்புழி நிற்புழிப்
பன்னு மாக்கள் பருகு நீரு
முண்ணுஞ் சோறு முடுக்கு முடையும்
பாவஞ் செய்த பண்டொரு நாளே. (உ௪)

## வெண்பா.

நாளோடு கோளு நலியாவே சூர்முதலைக்
கேளோடு சாய்த்த கெடுவில்செவ் — வேளோ
டுறவு சிறிதேனு முண்டாயி னன்னு
னுறைவு பழநிமலை யுண்டு. (உ௫)

## கலித்துறை.

உண்டே மதுவா னுயர்சோ லையினூற்றி னூற்றிடனீ
கண்டே பழநி மலைக்கா வலரையென் காதலுரை
வண்டே யினித்தாழ்த் திடிற்றறி யேனவர் வந்திடவே
பண்டோர் குறுவாய் வேண்டுதி யாலின்று பாட்டிசைத்தே.

## விருத்தம்.

இசைவருக வசைவருக வின்புறுக
துன்புறுக வென்பு சூழ்ந்த
தசையருக வுடல்விளக்க பருத்திடுக
தண்பழநித் தாமேன் மேவுந்

திசைசிறக வளர்ந்தபுகழ்த் திருக்கோயில்
புக்கிருப்போஞ் செவ்வே ளெங்கோன்
மிசையுருகு பாட்டிசைப்ப மலையடியா
ரழ யானை மேய வேளே. (௨௬)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

மேவலர் முப்புர மேலைநாட் செற்ற
சேவக னரும்பெறற் செல்வா பழநி
வேலா காமம் வெகுளி மயக்கமா
முக்குறும் பெறிகுவை முற்பய காரணஞ்
சூக்குமந் தூலமா மூவுடம் பழிக்குவை
அதனால்,
தனைய னறிவு தந்தை யறிவெனு
முண்மை கண்டே னுன்றன் பாலே. (௨௭)

## வெண்பா.

பால்கூட் டிகெதென் பழநியிறை மாட்டேறுகி
மால்கூட் டொருமனத்தை யன்றயான் — கால்கூட்டி
நிற்பப் பரிந்து நிகளமறுத் தொல்லையினிற்
பொற்பப் புவியிடையிப் போது. (௨௯)

## கலித்துறை.

போதிற் பொலியன்ன மென்னடை யின்மொழிப் புத்தமுத
மாதிற் குயிர்பெற வைமொன்று காய்நிர் மயக்கறுமோ
ஞாதிற் படாவெம் முலைகோடி ரன்னேமீர் சூழ்ச்சியிலீர்
யாதிற் பழநி யிறைநாமஞ் செப்புபு காப்பிடுமே. (௩௰)

## விருத்தம்.

இடுகிடை மாதர் மதிக்குறும் வெறுக்கை
யீட்டலே வேண்டினை நெஞ்சே
கடுகிடை வித்தம் பெறுவதா யிருப்பிற்
காவத மோடுகின் றனைக்கீ
ரிடுகிடை யென்ன மிதந்தனை நீந்தி
யேறுகின் றனைகரை பழநி
கடுகிடை யாதே பழநிநின் முன்னோர்
கண்டு சேமித்ததுண் டவணே.

## நிலைமண்டிலவாசிரியப்பா.

அவம்புரி மாக்க ளகப்புகா வொளியே
யின்ப வளத்தோ டிணையின் முத்தியாம்
பெறுதற் குரிய பொருட் கடலிற்
பிறந்தவா ரமுதே பிறங்கு பனிமலை
யதன்பாற் றோன்றி யவிரங் கையிலை
யரசின் மேற்பட ரருங்கொடி தந்த
மாறு மணத்து மலரே யுள்ளங்
கனிதரு வார்பெறூஉங் காமர்செங் கனியே
யிருபூங் கொடிக ளிருபுறம் படரக்
கடம்பவிர்ந் தொளிருங் கனகமால் வரையே
யுறுபிணி மருந்தா மொண்சிந் தாத்தின்
பின்வரும் பெற்றி பெற்றதென் பழநி
மாமலை மருந்தே மான்மண விருந்தே
யவித்தை யாங்கரி யடுத்துத் தொடர
வூத்தை யுடலமா மோரிடி னொற்றுட்

புகாற் றதன்கீழ்ப் பொறிப்பெய லாக்கலை
வேட்கைநஞ் சுடைய விரிமன நாகங்
கிடப்பக் கண்டக் கிணற்றிடைப் பாவனை
யாமறு கின்வே ரங்கை பற்றி
நான்றிட வதனை நணுகிப் பாவமா
மோரெலி கறித்திட வுய்தி காணா
தயரு முயிரெனு மறிவிலி கலவி
யின்பமாந் தன்றே ளிடைவிழுந் தேன்றுளி
நக்குபு சுவைமிக நன்றென மகிழ்ந்து
தன்னிலை மறப்பிற் சார்ந்தருட் குருவாய்.
மற்றவற் புரக்கு மாண்புளோ னீயே. (௩௨)

## வெண்பா.

நீரி னமிழ்வீர் நெருப்பி னிடைநிற்பீர்
கோரி னுகங்காண்பீர் நீபமலர்த்—தாரினான்
சேவடியே போற்றுமின் சேர்மின் பழநிமலை
காவடியோ டுற்றீர் கதி. (௩௩)

## கலித்துறை.

ஓடு மிருகண் ணருவி வியர்க்கு முடம்புவெம்மை
நீடு மயிர்சிலிர்க் குஞ்சொன் னழுவு நிரப்பொழியத்
தேடு மொருபொருள் கண்டென வுள்ளஞ் சிறந்துபொங்கு
ஈடு மெமது பழநி மலையடி நண்ணினர்க்கே. (௩௪)

## விருத்தம்.

நண்பின ரேனும் வன்பின ரேனு
நயமும் பயமுஞ் செயலாமோ

வெண்கணி யாரு மொண்புன லேப்பு
மிசைசொரள் பழநி வடிவேலா
பண்பற யாருங் கண்பெற நீயெம்
பரிசின் னிலைசெய் வனவேயா
மண்ணிடை யாவர் விண்ணிடை யாவா
வரத விதனை யறிவாரே. (௩௰

## நேரிசையாசிரியப்பா.

ஆரம் பிறக்கு மப்பொதி யத்தே
வாரம் பிறக்கு மறையுணர் முனிக்கு
மறையின் [illegible] வயங்குமொண பொருளைக்
குறையின் றருது குமரா வமரா
பதிக்கிறைக் காப்புரி பன்னும்போர் வீர
துதிக்கிறை நின்னைத் தூய வந்தண
னென்கோ வரச னெனகோ வந்தணை
னென்கு நந்தை வலமொரி யேந்து
மந்தண னென்ப தருமறை
மந்தண பாவது மன்ற வுணர்ந்தே. (௩

## வெண்பா.

உணவாற செருக்குவா ருன்னடிக்கீ ழன்பு
மணவார் பழநிமலை மன்னே—தணவார்
நிரகத் தருகின்ற கேடவற்றை யென்றும்
விரகற் றலைவிள்ளார் வென்று. (௩

## கலித்துறை.

வென்றி மதற்கு மதருளும் பழநி வியலவுனைச்
சொன்றி தருகசொல் னந்தரு கென்றே தொழுதிடுவார்
துன்றிநற் கற்பகங் காஞ்சிரங் காய்வேண்டிச் சூழ்ந்திடுவா
ரொன்றினை யென்னினும் வேண்டாது தாழ்பவ ருத்தமரோ.

## விருத்தம்.

உத்த மக்கவி யோதில ராயினும்
பத்தி மிக்க பரிசில ராயினு
நத்தி நிற்ப னலம்பழ நிக்கிறை
யத்த வற்பற் கருள லழகிதே. (௩௯)

## நேரிசையாசிரியப்பா.

அருமை குறியா தாரருள் வழங்கும்
பெருமை யுடையான் பிறங்கு பழநி
மலையம ரெம்மா னொருவன்
மலைவிலை யவனை வணங்குக யாரே. (௪௰)

முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

திருமயிலம்

# இரட்டைமணிமாலை.

---

## காப்பு.

### வெண்பா.

மயிலத் திரட்டை மணிமாலை நாவிற்
பயிலத் துணைவருமே பன்னு—மயிலற்கு
முன்வந்த செம்மன் முதுகாரிக் கொன்றையான்
பின்வந்து முன்னாகும் பேறு.

---

## நூல்.

### வெண்பா.

பூத்தாரும் பொய்கை பொலியுந் திருமயிலை
மேத்தாரும் பூத்தாரோ வேதமறப்—பூத்தார்மற்
றப்பதியின் வாழு மயிலவனைப் போற்றியிரு
கைப்பயனு முற்றார் மணந்து.

## கலித்துறை.

மணங்கொண்ட தாழ்குழன் மாதிடம் வைகவு மற்றொருத்தி
குணங்கொண்ட விற்புரு வத்தாடன் றோணலங் கூர்ந்துணையா
ணிணங்கொண்ட வேலா மயிலத் துறையு நிதியுனது
ருணங்கொண்ட நல்லடி யார்பாலெற் கன்பு கொடுத்தருளே.

## வெண்பா.

அருமை யருமை யறிதன் மயிலத்
திருமை தரவிருக்கு மெந்தை—பெருமையாஞ்
சீதரனார்க் கொணமருகா சேவற் கொடிமுருகா
காதரனைக் காதென்பேங் கண்டு. (௫)

## கலித்துறை.

கண்டே னினையே கருணைக் கடலெனக் கண்டபின்ன
ருண்டே யினிமற் றொருதெய்வம் வேறென வோகையுளங்
கொண்டே னெவர்க்கும் வினைதடிந் தாளனின் சொர்ணமயன்றே
பண்டே யொருபெண்மு னின்றாண் மயிலப் பழம்பொருளே.

## வெண்பா.

பொருணாடிப் பல்கலையும் போதவலைக் கெட்டா
தருணாடிப் பற்றுநரை யண்மித்—தெருணாடித்
தித்திக்குந் தேனே திருமயிலத் தெய்மானே
பத்திக்கு ணாகளியப் பண். (௬)

## கலித்துறை.

பண்பார் கலைநில னன்போ ரணுகிலன் பைத்தலைமேற்
றிண்பார் பெறினு மடங்கா வவாவினன் றீவினையா
ருண்பார் பிடித்தொல் லொருநாளு நைக்தே யுழல்வனெனைக்
கண்பார் மயிலத் தொருவா வுருவார் கலையுணர்வே. (௬)

## வெண்பா.

உணர்ந்தார்க் குணர்வரியா யொண்மயிலத் தெந்தாய்
பணர்ந்தாங்கு பூவிற் பரிக்கு—நிணர்ந்தாங்கு
காயத்தா லாயபயன் கண்டே னினைப்போற்ற
னேயத்தா னின்னடிக்க ணின்று. (௭)

## கலித்துறை.

கண்களங் தாமரை போன்ம்மெனப் பூத்தென் கசிவொழுகு
புண்களன் றேநின் மயிலங்கா ஞவெஙிற் போதவனுங்
கண்கமெோ ராயிரத் தானுந் தொழுதெழு கந்தபுயத்
தண்களன் மையுடைத் தாதை யணைக்கு முயர்பரமே. (அ)

## வெண்பா.

தாதைநீ தாய்நீ தமருநீ யாவுநீ
தீதை யகற்றல் செயலுனக்கே—கோதை
குருவாகக் கொள்ளக் கொழுநனுமாய் நின்றேய்
வருவாய் மயிலத்தெம் மான். (௯)

## கலித்துறை.

தருவாரும் விண்ணு ளுறையும் விபுதர் தபோதனர்கள்
வருவாரும் போவாரு மாகித் திரியு மயிலமுன்னீர்
தருவாரு முண்டோ கதிபிற தேவருட் சார்திரய
னுருவாரு நான்கு சிரமேலுங் குட்டு மொருவனையே. (௰௪)

## வெண்பா.

மேலொருகீ ழில்லான் றிருமயிலத் தாறுமுகன்
றேரொருகீழ்ப் பாம்பணிவான் றோன்றலவன் - பாலொருதேன்
சேர்ந்தொழுகு வாலெயிற்றென் செல்வியிவ ளென்னீது
நேர்ந்தணைய வைத்திட்டா னே. (௰௫)

## கலித்துறை.

வைக்கு நினையேதன் னெஞ்சத்தி னென்மகண் மாரனம்பு
தைக்க மெலியுமெய் கண்டுயில் கொள்ளா டருமமுது
கைக்கு நினக்குவே ளென்னுமோர் நாமங் கருதியிட்டார்
புக்கு மயிலத் தொருவா புரிந்த புதுமையென்னே. (௰௬)

## வெண்பா.

புதவதொன்றே கற்பீர்நீர் பொய்ம்மாற்றங் கொள்வீர்
சதுரருறை மாமயிலச் சாமி — மதுவுறைய
நீபத்தா ரெந்தையன்றி நேரிழையீ ராடவர்கா
ளாபத்தார் தாநீக்கு வார். (௰௭)

## கலித்துறை,

தாதார் கடம்பணி சண்முக நாதா தருகமலப்
போதார் பரவு மயிலத தொருவா புரிந்தருணீ
தாதா வெனவிரந் துய்ந்தன ரன்பர் சழககனிஙகே
யோதா திருநதே ஞெருமூன்றி னெனமன மூன்றினனே. ()

## வெண்பா.

மனஙகொள்ளாக் காதலுற்றேன் மாமயிலத தண்ணு
வினஙகொள்ளு நின்னன்ப ரேயென்--றனஙகொள்வார்
நீஙக வணைநது நெகிழ்ந்தின்பு தாராரோ
வோஙகுகவென் றென்றே யுரைத்து. (௰௯)

## கலித்துறை.

அன்னே யிரஙகலை யையா மயிலத் தெனதுதந்தா
யென்னேத நீகண் டிலேயோ நினக்கா திரணகெண்கள்
கொன்னே மிளிர்வுற் றிலவே யடியா குறைகள்கண்டு
பொன்னே புகழே பிறவே யளித்திடப் பூத்தனவே. (உ௰)

முற்றிற்று.

மகாமஹோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல்நிலை

உள்ளநல மெல்லா மொருங்குவரு மென்னெஞ்சே
கள்ள நினைவொழித்துக் காதலான்—மெள்ளவே
யேனப்பா நீயழுதா யென்றே யுமைதந்த
ஞானப்பா லுண்டானை நாடு. (௫)

கண்டெடு மென்மொழியார்க் கண்டு பலநாளுந்
தொண்டுபடு மென்னெஞ்சே தூயரின—மண்டுபுகழ்ச்
சண்பையு யர்நகரான் சம்பந்தன வார்கழல்க
ளெண்பையு ளிற்றுப்போ மே. (௬)

சாத்திரமி சைக்குமா சாதனங்க ளைப்பயிலக்
காத்திரமி லென்னெஞ்சே காணுமின்பு—நீத்த
மிகலிக்கோன் மாய வெரித்தோனைப் பாடும்
புகலிக்கோன் றாளைப் புகழ். (௭)

நாணுக்கு நல்லோர் நகைகொளவா ளென்லாம்
வீணுக்கு ழைக்குமென் வீறினெஞ்சே—வேணு
புரத்தான் கமலமொக்கும் பூங்கழல்க டம்மைச்
சிரத்தான் வணங்கியருள் சேர். (௮)

ஐயலம ருந்தவரு மந்நாட்கிங் கஞ்சுசெஞ்சே
நையலம ராவதியே னம்மையுய்க்கு—மையலமண்
பாழியிறைப் போததனிற் பங்கமுறச் செய்யுமொரு
காழியிறைப் பன்னுமங் கல். (௯)

எடுங் காமுமா யேங்கு மடநெஞ்சே
கூடுங் கருதியவை கூறுமுன—நாடு
மொருமயிலை யன்னவளா யோதியென்னை யாக்கத்
திருமயிலை புக்கவனைத் தேர். (௧௦)

இருவினைசம் பந்தத் தினையுமட னெஞ்சே
யொருவினை *சம் பந்தமங் குன்னி—மருவியே
கூடலரை யன்சுரநோய் கோதகலத் தீர்த்தங்கண்
கூடலரைச் செற்றவனைக் கூறு. (௯)

இருக்கோல மிட்டழைப்ப வேனென்னுன் றன்னைக்
கருக்கோல நீங்கிடவே காட்டுங்—திருக்கோலக்
காவி லுயர்பொற் கரதாளம் பெற்றோன்பேர்
நாவி லமையநெஞ்சே நாடு. (௰)

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

### கட்டளைக்கலித்துறை.

திருநா மனவ திருப்பணி செய்தவ செல்வமல்கு
† பெருநா மனவத் தொடர்பற வேயின் பெயரறைந்துங்
கரு ‡ நா மனவஃ தெழுதியு மூய்ந்தனன் கண்டுகொண்டோ
மிருநா மனவணி லின்புற் றுயர்ந்திட வெம்மகமே. (௧)

நாராள ணைந்த வொருபா லுடையா னலமறியா
வோராள வாமிக் குடையவ னென்னு துனியெனையு
நீரான விங்கு வரினது வன்றோ நிறையருளெங்
காரான ரேதிருத் தாண்டக மோதிட காவலரே. (௨)

---

* சம்—பிறப்பு.

† பெருநாமன்—அப்பூதியடிகள்.

‡ நாம்—அச்சம்.

அப்பூ டருக ரிடுனொன் று நீரவி லைந்தெழுத்தைச்
செப்பூ கமிலாச் சிறியேனு மூய்யச் செயலுளதோ
விப்பூ தலத்தா ரெவரு மிஙும்பூ திசைக்கவன்பி
னப்பூ திமைந்தற் கடாவிடந் தீர்த்த வருட்கடலே. (௩)

பாவான் மகிழ்ந்தோ பொதிசோறு தாங்கிப் பரமனினக்
கீவான் மலர்ப்பத நோவவந் தானறை யெங்குருவே
மாவா னவர்பணி யுந்திரு வாமூர் வருமருந்தே
தாவா வருளே தவமே தவத்தின் றனிப்பயனே. (௪)

குளத்திருக் கெண்டோண் மதிநதிகூவிளங்கொன்றைமத்தங்
களத்திருக் கும்வல் விடமுடை யானைக் கருதறியா
வுளத்திருக் கேனுக் கொருவுள வோங்க வுரையுமுத்தி
வளத்திருக் கீது முறையல வோசொலின் மன்னவரே. (௫)

ஏத மகற்றி யெழுழ்விடை யூர்தியை யேத்தியுயர்
போத மதற்றுப் புலையேன் பிழைக்குமப் போதுளதோ
வேத மடைத்த கதவந் திறக்குமெம் வித்தகமாச்
சீத மலிந்த கருங்கட னீந்துந் தினமணியே. (௬)

விருப்பா திகளான் வெதும்பிநின் றேனை வியனருளாற்
றிருப்பா திவண்விட் டிருந்தனை யேலது செப்பமன்றே
மருப்பா திரிமா தவிசண் பகம்வழை மன்னுவளத்
திருப்பா திரிப்புலி யூரிற் கரைவருந் தெள்ளமுதே. (௭)

இம்மா வசுந்தரை வாழ்க்கையி ஞல்வரு மின்னமக்
கம்மா வளவிலை யாதவி னென்றே வதையகன்று
சும்மா விருப்ப னெளியே னியம்புதி சொல்லரச
கைம்மா வமணர் துயருறத் தாழுமெங் கற்பகமே. (௮)

